


# சிவாஜி

ஞாயிறு வாரப்பதிப்பு

கிராம, சமுதாய நல, கலை, இலக்கியப் பத்திரிகை

## மனிதனே பெரியவன்

★

சத்திருந்தால் பூப்பூக்கும், —இல்லை என்றால்
தலைவாடி நின்றுவிடும் செடிக ளெல்லாம்;
வித்தகனும் மானுடனே உண்மை யின்றி
வெறுஞ்சிரிப்பு விரிக்கவுமே கற்றுக் கொண்டான்
மானுடனே பெரியவனும்; அய்ய மில்லை;–
மற்றெல்லாம் சிறியனவாம்; பொய்யே இல்லை !

ஒளிஎன்றால் முகமலரும், இருளைக் கண்டால்
உளஞ்சுருங்கிக் கூம்பிவிடும் தாம ரைகள்;
ஒளிமுன்னும் முகங்கறுப்பான், – வயிற்றுக் காக,
ஒளிஎன்பான் பேயிருட்டை, மனிதத் தோழன் !
மானுடனே பெரியவனும்; அய்ய மில்லை; –
மற்றெல்லாம் சிறியனவாம்; பொய்யே இல்லை !

'காகாகா' என்றுகுரல் கொடுத்தால் காக்கை
கணத்திலங்கே ஒருகூட்டம் கூடும்; நெஞ்சம்
நோகாமல் தன்வழியே போவான், யாரோ
துயர்வாட்டத் துடித்தழுதல் கேட்டுக் கொண்டே...
மானுடனே பெரியவனும்; அய்ய மில்லை; –
மற்றெல்லாம் சிறியனவாம்; பொய்யே இல்லை !

பசித்தாலே புசித்துஇன்பம் கண்டு வாழும்,
மற்றஉயி ரினமெல்லாம்; மனிதத் தோழன்,
பசிதீர்ந்தால், பிறர்பசிக்கச் செய்வ தற்கே
பட்டயங்கள் போட்டுக்கொண்டு உலவு கின்றான்...
மானுடனே பெரியவனும்; அய்ய மில்லை; –
மற்றெல்லாம் சிறியனவாம்; பொய்யே இல்லை !

— சாலை இளந்திரையன்

## ராஜன் பாபுவுக்கு நேருஜி பாராட்டு

ராஷ்ட்ரபதி பதவியிலிருந்து விலகவிருக்கும் டாக்டர் ராஜேந்திர பிரசாத்துக்கு பிரதம மந்திரி நேரு லோக் சபையில் பாராட்டுதல்கள் தெரிவித்தார்.

நமது குடியரசு ஏற்பட்ட முதல் 10 ஆண்டுகளுக்குச் சற்று அதிகமாகவே அவருடைய அறிவு மிக்க வழி காட்டுதலாலும் தனித்தன்மையாலும் நமது அரசியலமைப்புக்கே கவுரவம் அளித்துள்ளார் என்பதை எண்ணி இங்குள்ள அங்கத்தினர்கள் அனைவரும் வெளியில் உள்ள அனைவரும் அவருக்கு ஆழ்ந்த நன்றி தெரிவிப்பார்கள் என்பதில் எங்களுக்குச் சந்தேகமில்லை.

காலஞ் செல்லச் செல்ல பழைய தலைவர்கள் மறைந்து வருகிறார்கள். இயற்கையாகவே இந்த இடைவெளியை நாம் உணருகிறோம். தேச முழுவதுமே ஒரு புதிய சூழ் நிலையில் ஒரு புதிய நிலைமையை எதிர்நோக்குகிறது. பிரச்சனைகள் வேறு விதமாக இருப்பதால் மட்டுமல்ல இந்தியாவில் எதிர்காலத்திற்கு வழி காட்டுபவர்களாக உள்ளவர்கள் இந்திய சுதந்திரப் போராட்டத்திலும் பங்கு கொண்டிருந்தவர்கள் என்பதால் இவர்களுக்கு பிரச்சனைகளை சமாளிப்பதில் ஒரு தனியான திறமையும் தகுதியும் ஏற்பட்டது. தகுதி என்று நான் குறிப்பிடுவது அவர்கள் மக்கள் மனதில் சுதந்திரத்திற்கு ஏற்பட்ட காலத்திற்கும், சுதந்திரம் பெற்ற பின்னுள்ள காலத்திற்கும் ஒரு பாலமாக இருந்து இடைவெளியை நிரப்பினர் என்பதைத்தான். இந்த இடைவெளியில்லாமற் போகும் போது நமது சுதந்திரப் போராட்டம் பற்றிய விவரங்கள் சரித்திர சம்பவங்களாகப் போய் புத்தகங்களில் மட்டும் படித்தறிய வேண்டியவைகளாக வரும்போது நிலைமை இயற்கையாகவே வேறாக இருக்கும். நமது ராஷ்ட்ரபதியை விட சிறப்பாக வேறு யாரும் இந்த இடைவெளியை நிரப்பமுடியாது.

இத்தனை வருடங்களாக நமது தேசத்தின் தலைவராக டாக்டர் ராஜேந்திர பிரசாத்தைக் கொண்டிருக்கும் பாக்கியம் பெற்றது நமது அதிர்ஷ்டமே.

25—3—1962

# காயகல்பம்

தேனை சிறந்த மருந்துப்பொருளாக நம் நாட்டினர் உபயோகித்து வருகின்றனர். அதை ஏன் அப்படி உபயோகிக்க வேண்டும் என்பதை மேற்கு ஜெர்மன் நிபுணர் ஒருவர் கண்டுபிடித்திருக்கிறார். தேன், தேனடை இவைகளைக் கொண்டு, முதியவர்கள் வாலிப முறுக்குடன் இருக்க காயகல்ப மருந்து தயாரிக்கப்படுகிறதாம்.

தேனீக்களிடம் கதிரியக்க சக்தி இருக்கிறதென்பதும் கண்டு பிடிக்கப்பட்டிருக்கிறது. இதனால்தான் அவை புஷ்பங்களிலுள்ள மகரந்த தாதுக்களை நாடி அதிலுள்ள தேனை சேகரிக்க முடிகிறது. இந்த கதிரியக்கச் சக்தியினால்தான் தேன் அடைக்குள் கும்மிருட்டாக இருந்தாலும் தேனீக்களுக்கு கண்கள் தெரிகின்றன.

தென் ஜெர்மனியில் ஜோசப் கிராமல் என்பவர் தேனீக்களை வளர்த்து வருகிறார். இவைகளைப் பற்றி இவர் மிக நன்கு ஆராய்ந்து பல நூதனத் தகவல்களை எல்லாம் சேகரித்திருக்கிறார். தேன், தேனடை இவைகளைக் கொண்டு "ஜெலீ-ராயல்" என்ற அபூர்வமான காயகல்ப மருந்தை இவர் தயாரித்து வருகிறார். தேன், தேன் சம்பந்தப்பட்ட இதரப் பொருள்களைத் தயாரிப்பதுடன் மட்டுமின்றி சிறந்த ஆராய்ச்சியாளராகவும் இவர் விளங்கி வருகிறார்.

"ஜெலீராயல்" என்பது ராணி ஈக்களின் ஹார்மோன்களைக் கொண்டு தயாரிக்கப்படுவதாகும். கதிரியக்க சக்தி தேனீக்களுக்கு உண்டு. அதுவும் ராணி ஈக்கள் இச் சக்தி காரணமாகத்தான் அதன் வாழ்நாளான ஐந்து வருஷங்களுக்குள் 1,50,000 முட்டைகளை இடுகின்றன. இதற்குக் காரணமாகவுள்ள ஹார்மோன்களைக் கொண்டு காயகல்ப மருந்து செய்யப்படுவதால் முதியவர்களுக்கும் வாலிப முறுக்கு ஏற்படுத்தும் சக்தியை இது பெற்றிருக்கிறது.

தேனீக்களிடம ஓரளவுக்கு கதிரியக்க சக்தியுள்ளதென்பதை விஞ்ஞானிகள் கண்டுபிடித்திருக்கிறார்கள். இந்த உண்மையை "கீஜர் கெவண்டர்" என்கிற கருவியும் நிரூபித்திருக்கிறது. முதலில் சமீபத்தில் உலகில் ஏற்பட்டுள்ள கதிரியக்க பரவுதலே இதற்கு காரணம் என்று நம்பப்பட்டது. ஆனால் ஜோஸப் கிராமல் இயற்கையாகவே தேனீக்களிடம் கதிரியக்க சக்தி அமைந்துள்ளது என்பதை நிரூபித்திருக்கிறார்.

பூக்களின் தாதுக்களிடமே இந்தக் கதிரியக்க சக்தி இருந்து வருவதாகவும் இதை அறிந்துதான் அங்கு தேன் கிடைக்கும் என்று தேனீக்கள் உணர்ந்து அந்த இடங்களுக்கு ஈர்க்கப்படுகிறதென்றும், தேனீக்களின் இன வளர்ச்சிக்கே கதிரியக்க சக்தி பெரிதும் உதவுகிறதென்றும் இவர் கண்டு பிடித்திருக்கிறார். தாவரங்களின் மலர்களிலுள்ள தாதுக்கள் ஒரு கட்டத்தில் கதிரியக்க சக்தியைக் கொண்டதாக விளங்குகிறது. இதை அறியும் சக்தி தேனீக்களுக்கு இருப்பதால் அவைகளிடம் "ராடார்" முறையொன்று இயங்கி வருவது கண்டு பிடிக்கப்பட்டுள்ளது.

இதை நிரூபிக்க விஞ்ஞானிகள் மகரந்தப் பொடிக்கு பதிலாக கரிப்பொடியை வைத்து அதற்கு ஓரளவு கதிரியக்க சக்தியையும் அளித்தனர். தேனீக்களுக்கு கரிப்பொடி பயன்படாது என்ற போதும் அவை இந்த கரிப்பொடியைப் பூக்களிடமிருந்து சேகரித்து தேன் கூட்டிற்கு எடுத்து சென்று விட்டதாம். தேனடைக்குள் உள்ள கதிரியக்க மகரந்தப் பொடிகள் தேனீக்களுக்கு அடை இருக்கும் இடத்தை உணர்த்தவும் கூட்டிற்குள் இருளாக இருந்த போதும் வழி தெரியவும் உதவுகிறதாம். கதிரியக்கப் பொருள்களை சேகரித்துப் பழக்கமாகிவிட்டது காரணமாக தேனீக்களும் ஓரளவுக்கு கதிரியக்க சக்தியைப் பெற்று விட்டன. மிக மிகச் சிறிய அளவில் இந்த சக்தி இருப்பதால் இதனால் அவைகளுக்கு எவ்வித ஆபத்தும் ஏற்படுவதில்லை. ஈக்களின் கண்கள் "ராடார்" திரைபோல் இயங்குகின்றன. இயற்கையின் மர்மங்களில் ஒன்று விஞ்ஞானிகளின் முயற்சி காரணமாக இப்போது வெளிப்பட்டுள்ளது.



# உலகத் தலைவர்கள்

## நோரோடம் ஸிஹானூக்

தென் கிழக்கு ஆசியாவின் அரசியல் அரங்கில் முன்னணியிலிருக்கும் தலைவர்கள் அநேகருள் கம்போடியா தேசத்து இளவரசர் நொரோடம் ஸிஹானூக் ஒரு முக்கிய இடம் பெற்றுள்ளார். இவர் நாட்டு மன்னராக சில காலம் இருந்து பின் அப்பதவியைத் துறந்து பிரதமராகப் பணியாற்றினர். இவர் மண்வெட்டியையும் கடப்பாரையையும் ஏந்தி சாலை அமைப்பு வேலையில்கலந்து கொள்வார். சங்கீதத்தில் ஒரு பெரிய மேதையாகையால் ஆர்கெஸ்ட்ரா சங்கீதத்திற்கு வேண்டிய பாட்டுகளை அமைத்துக் கொடுப்பார். கடவுளுக்கு அடுத்தபடியாக நாட்டு மக்களால் போற்றப்படுவார். இவருடைய நண்பர்கள் இவரை கம்போடியாவுக்கு சுதந்திரம் என்னும் கட்டிடத்தைச் சமைத்த மகா சிற்பி என்று புகழ்வார்கள். இவருடைய விரோதிகள் இவரை அகம்பாவம் கொண்டவர் என்றும் உலக அரசியலில் பெயரெடுக்கப் பாடு படுவாரே ஒழிய நாட்டு நலனைப் புறக்கணிப்பார் என்றும் நிந்திப்பார்கள்.

இவர் 1941 ஆம் வருடம் பட்டத்திற்கு வந்தபொழுது இவருடைய உழைப்பால் நாடு ஒரு நாள் சுதந்திரம் பெறும் என்று ஒருவரும் கருதவில்லை. நாட்டரசர் மோனிவாங் என்பவர் இறந்ததும் அவருடைய மூத்த மகன் மோனிரத் என்பவர் பட்டத்திற்கு வருவார் என்று மக்கள் எண்ணியிருந்தார்கள். ஆனால் பிரெஞ்சுக்காரர்களுடைய சூழ்ச்சியினால் மோனிரத் புறக்கணிக்கப்பட்டு நோரோடம் ஸிகானூக் மன்னராகத் தேர்ந்தெடுக்கப் பட்டார். நோரோடம் இறந்து போன மன்னர்க்கு இரு வழியில் உறவினராவார்.

1942ல் நாட்டு தேசாபிமானிகள் சிலர் ஸான் நொகே தான் என்பவர் தலைமையில் சுதந்திரத்திற்குப் பாடுபட வேண்டும் என்று தீர்மானம் கொண்டு இரண்டாவது உலக மகா யுத்தத்தில் பிரெஞ்சு தேசம் தோல்வி அடைந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்ள முன் வந்தார்கள். புத்த பிக்குகள் கலந்த கூட்டம் ஒன்று ஒரு நாள் நாம் பென் என்னும் பெயர் கொண்ட தலைநகரில் பெருத்த ஆர்ப்பாட்டம் செய்தது. ஆனால் இக்கூட்டம் பிரெஞ்சு போலீஸால் விரட்டி அடிக்கப்பட்டது. தலைவர் ஸான் நொகே தான் நாட்டை விட்டு ஓடி பாங்காக் நகருக்குச் சென்று அங்கு ஜப்பானியரிடம் சரண் புகுந்தார். தலைவர் தானுந்த நாட்டு மக்களின் பாராட்டல் அதிகப்படவே ஒரு சமயம் இவரா அல்லது ஸிஹானுக்கா தேசீயத் தலைவர் என்ற ஒரு ப்ரச்சனை ஏற்பட்டது.

ஜப்பானியர்கள் இண்டோ சீனவைக் கைப்பற்றிய பொழுது 1944 ஆம் வருடம் மார்ச்சு மாதம் மன்னர் ஸிஹானூக் கம்போடியா விடுதலை பெற்று விட்டது என்று அறிவித்தார். அப்பொழுது ஸான் நொகே தான் ஜப்பானியர்களுடன் நாடு திரும்பி அவர்களது உதவியால் வெளி நாட்டு இலாகா மந்திரியாக இருந்தவர் திடீரென்று தன்னைப் பிரதமர் என்று அறிவித்துக் கொண்டார். யுத்தம் முடிவடைந்ததும் நேச நாட்டுப் பிரதி நிதிகள் இண்டோ சீனவுக்கு விஜயம் செய்த பொழுது ஸான் நொகே தான் போர்க்காலத்தில் ஜப்பானியரிடம் உறவாடிய குற்றத்திற்கு அவரை அவர்கள் பிரான்ஸ் தேசத்துக்கு அகற்றி அங்கு ஆறு வருடங்கள் சிறையிலிட்டார்கள். அவரைச் சார்ந்தவர்கள் ஆயுதம் ஏந்தி அண்டை நாடாகிய ஸயாம் தேசத்து எல்லைப் புறத்துக்குச் சென்று ஸயாம் தேசத்திலிருந்தும், வியட்மின் பிரதேசத்திலிருந்தும் உதவி நாடினர்கள்.

ஸான் நொகே தான் நாடு கடத்தப் பட்டதும் அரசர் நொரோடம் நாட்டு சுதந்திரத்திற்குப் பாடுபடுபவர் என்று முன்னிலும் பன்மடங்கு அதிகம் புகழ் பெற்றார். 1946-ம் வருடம் ஜனவரி மாதம் பிரெஞ்சு அரசாங்கம் கம்போடியாவுக்கு பிரெஞ்சு ஆதிக்கத்தினுள் சுயாட்சி உரிமை வழங்கியது. ஆயினும், பிரெஞ்சு மேற் பார்வையாளர்கள் அவர்களது கவனத்தைக் கடுமையாக செலுத்தினதின் காரணத்தால் சுய ஆட்சி முரண்பட்டது. அவ்வமயம் அரசரும் சில தொல்லைகளுக்குள்ளானர். அதாவது, புதிதாக அமுலுக்கு வந்த அரசியல் அமைப்பின் கீழ் அரசரின் உரிமைகள் குறைக்கப்பட்டு ஒரு புதிய ஜனநாயகக் குழு அரசாங்க நிர்வாகத்தை ஏற்கலாயிற்று. ஆனால் கம்போடியா அரசியல் வாதிகள் அவர்கள் அடிக்கடி ஈடுபட்ட பூசல்களினல் குழுவின் பலம் குன்றலாயிற்று. 1951ல் ஸான் நொகே தான் விடுதலை பெற்று நாடு திரும்பினர். இவர் வருகையினல் அரசியலில் நெருக்கடி ஏற்பட்டது. ஸான் நொகே தான் ஸையாம் எல்லைப் புறத்தில் கூடியிருந்த தன்னைச் சார்ந்தவர்களுடன் கலந்து கொண்டார். இக்குழுவினர்களுக்கு "இஸ்ஸாரக்" அல்லது கம்போடியா விடுதலையாளர்கள் என்று பெயர். இக்குழுவினர்களை வியட்மின் தன் அதிகாரத்தின் கீழ் எடுத்துக் கொண்டது.

1952-ம் வருடம் ஜனவரி மாதம் ஸிஹானூக் தனது மந்திரி சபையைக் கலைத்து முழு அதிகாரத்தையும் தானே ஏற்றுக்கொண்டார். மூன்று வருடங்களில் நாட்டுக்குச் சுதந்திரம் தேடித் தரப்போவதாக அறிக்கை விடுத்தார். அடுத்த மாதம் இவர் பிரான்ஸுக்கு சென்று இஸ்ஸாராக் இயக்கம் கம்போடிய வாசிகளின் விசுவாசத்தை பாதிக்கிறதென்றும் இதற்கு கம்போடியாவுக்கு முழு சுதந்திரம் வழங்குவது தான் மருந்து என்றும் கூறினர். பிறகு, கானடாவிலும், அமெரிக்காவிலும் ஜப்பானிலும் பிரெஞ்சு அரசாங்கம் தன்னுட்டிற்கு சுதந்திரம் வழங்க வேண்டுமென்று பிரசாரம் செய்தார். நாடு திரும்பி சில காலம் ஸையாமின் தலைநகரில் வாசம் செய்து விட்டு மீண்டும் ஊர் திரும்பினர், இச்செயலினல் அரசியலில் பிரெஞ்சு நிர்வாகிகளுக்கு ஒரு சங்கட நிலை ஏற்பட்டு வேறு வழி இல்லாமல் இவருக்கு சலுகைகள் காட்ட நேரிட்டது.

1955-ம் வருடம் மார்ச்சு மாதம் ஸிஹானூக் தன் பெற்றோர்களை அரசியல் நிர்வாகப் பொறுப்பை ஏற்றுக் கொள்ளச் செய்துவிட்டு மன்னர் பதவியிலிருந்து விலகிக் கொண்டார். விலகிய பின்னர் ஒரு தனிக் கட்சியை உருவாக்கி அதற்கு சங்கம் என்று பெயரிட்டார். செப்டம்பர் மாதம் நடந்தேறிய பொதுத் தேர்தலில் தன்னுடைய சொற்பொழிவாற்றும் வல்லமையை நன்கு பயன் படுத்தி மகத்தான வெற்றி பெற்றார். விளைவு மன்னர் மந்திரியானர்!

அன்று முதல், ஸிஹானூக் என்றால் கம்போடியா

(அடுத்த பக்கம் பார்க்க)

# சுகவழி

—ராதிகா

"நோயற்றவாழ்வே குறைவற்ற செல்வம்" என்பது யாவரும் உணர்ந்ததே; எத்தனை செல்வந்தராயிருப்பினும் நோய் வாட்டிக் கொண்டிருந்தால் அவர்களால் சுகமாக மட்டுமல்ல மன அமைதியோடும் இருக்க முடியாது. ஒருவருக்கு, பணம், புகழ், மதிப்பு எது இருந்தாலும் அவர்கள் ஆரோக்யம் பாழ்பட்டு இருப்பின் மனப்பூர்வமாக வாழ்வில் மன அமைதியுடன் இருக்கவே முடியாது. வாழ்வில் பல சமயமும் வெறுப்புதான் மிஞ்சும். மனம் தான் உடல் வியாதிகளுக்குக் காரணம் என்று பலர் கூறுவர். எனினும் மனம் என்ன உற்சாகமாய் இருந்தாலும் உடலில், ஆங்கில வைத்ய முறைப்படி வைட்டமினில் ஏதேனும் ஒன்று குறைவானாலும் நம்நாட்டு வைத்ய முறைப்படி வாய்வோ, பித்தமோ, உஷ்ணமோ அதிகரித்தாலும் சுகவீனம் ஏற்பட்டுவிடுகிறது.

உடல் ஆரோக்யமாய் நோயற்று இருக்க மன உற்சாகமும் அமைதியும் பாதியளவு உதவுமேயன்றி பூரணமாக மகிழ்ச்சியொன்றே ஆரோக்யத்துக்கு வழியாகிவிடாது. மனம் உற்சாகம் நிரம்பியிருக்கிறது என்று பல நாட்கள் சாப்பிடாமலோ அல்லது வெயிலில் சுற்றிக் கொண்டேயிருந்தாலோ உஷ்ணத்தினால் நோய் தான் வரும். பசியினால் தலை சுற்றல் மயக்கமும் பித்த வாய்வும் ஏற்பட்டு தலைவலியுடன் நோய்க்கு அஸ்திவாரமிடப்படும். என்னதான் நம் உடலை பாதுகாக்க கவனமாக உண்டு உறங்கினாலும் வியாதி ஏற்படுகிறதேயென்றால் அது மீறிய சக்தி. அதைத் தடுக்க இயலாது. எனினும் நம்மால் கூடுமானவரை உடலை ஆரோக்யமாய் வைத்திருக்க முயற்சிக்க வேண்டியது ஒவ்வொருவருடைய கடமையுமாகும் என்பதை யாரும் மறக்க மாட்டார்கள். சுத்தமான காற்றும், நீரும், உணவும் முதலில் அத்யாவசியம் என்பதையும் யாவரும் உணர்வர்.

சாதாரணமாக, நோயுற்றவர் சிறு குழந்தைகள் தவிர ஏனையோர் தினசரி குளிர்ந்த நீரில் குளிக்கவேண்டும். சுத்தமான நீரைக் குடிக்கவேண்டும். நீர் குடித்தால் சரீரத்திலுள்ள உள் அழுக்கும் நீங்கும். உணவை நன்கு மென்று விழுங்குவது முக்யம். அவசரமாய் சாப்பிடக் கூடாது. உணவு பூராவாக உண்டபின்பே தண்ணீர் குடிக்க வேண்டும். இடையே நீர் குடித்தால் ஜீரண சக்தி நாளடைவில் கெட்டு விடும். உணவு உண்டபின் சற்று ஓய்வு எடுத்துக் கொள்வது அவசியம். ஆரோக்ய வாழ்விற்கு உள்ளம் ஆரோக்யமாய் இருக்கவேண்டும். அதற்கு முறைப்படி சிந்தனை சில நிமிடமேனும் இறைவன் மீது செலுத்தி வழிபடுதல் அத்யாவசியமாகும்.

உழைப்பினால் ரத்தம் அதிகரிக்கும். அது தசைகளுக்கும் அதிக அப்பியாசம். அதனால் புத்தி கூர்மை, ஞாபகச் சக்தி முதலியவை ஏற்படும். உடல் பருமன் அதிகமுள்ளவர்கள் தினசரி பகல் நித்திரை செய்வதை அறவே விட்டும், உணவு உண்ணும்போது இடையிடையே நீர் அருந்துவதுடன், அதிக நீர் தினசரி அருந்தினாலே பருமன் குறைந்துவிடும். அதிகமாக மெலிந்தவர்கள் மன அமைதி மட்டுமல்லாமல் தினசரி பகலில் நித்திரை செய்தும் அதிக நீர் குடிக்காமலும் உணவு அருந்தும்போது இடையே நீர் அருந்தாமல் உணவை உண்டபின் தண்ணீர் குடித்தால் உடல் சற்றுப் பருமனாவது நாளடைவில் காணலாம்.

ஒவ்வொருவரும் கூடுமான அளவு மனதை உற்சாகமாகவும் உடலை ஆரோக்யமாகவும் வைத்திருந்தால் நோய் விரைவில் பீடிக்காது என்பது திண்ணம்.

A வைட்டமின் பால், கீரை வகைகளில் அதாவது, அரைக் கீரை, முருங்கக் கீரை, பருப்புக் கீரை, கொத்துமல்லி, கருவேப்பிலை, வெந்தயக் கீரை, சுண்டைக் காய் வத்தல், சம்பு முதலியவற்றில் அதிகம் உள்ளது. தினசரி 4 அவுன்ஸ் கீரை சாப்பிட வேண்டும். A வைட்டமின் பச்சை இலைகளில் சூரிய வெளிச்சம் படுவதால் ஏற்படுகிறது.

A வைட்டமின் கண் பாதுகாப்புக்கு மிக முக்யமானது. இது குறைவானால் காலரா, சீதபேதி, கபவாத ஜுரம், டைபாய்டு, பெரியம்மை, முதலியவை எளிதில் வரும். தோலில் பிரகாசம் ஏற்பட, புண்காயம் எளிதில் ஆற A வைட்டமின் தேவை.

சில மக்கள் முகம் ஒளியிழந்து காணப்படுவதற்கு இது போதாததே காரணம். A வைட்டமின் போதுமான அளவு கிடைக்காவிட்டால் இரவில் கண்ணே தெரிவதில்லை.

✲

## இலக்கியச் சொற்பொழிவு

மதுரைத் தமிழ் எழுத்தாளர் சங்கச் சார்பில் சென்ற 17-3-62 சனிக்கிழமையன்று, பிரம்ம ஞான சபைக் கட்டிடத்தில் கூட்டம் ஒன்று நடைபெற்றது. 'கம்பர்' திரு தி. திருவேங்கடம் ஐயங்கார் "கோசல ராமன்" என்பது பற்றி அரியதொரு இலக்கியச் சொற்பொழிவு நிகழ்த்தினார். அன்னார் கம்ப ராமாயணச் செய்யுட்கள் பலவற்றை மேற்கோளாகக் காட்டி அழகுறப் பேசினார். கழகச் செயலாளர் திரு வி. ஜி. சீனிவாசன் சொன்ன இறை வணக்கத்துடன் விழா தொடங்கியது. தமிழாசிரியர் 'வித்துவான்' அ. சிவசுப்பிரமணிய ஐயர் நன்றியுரை நவின்றார்.

★

---

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

வா அல்லது கம்போடியா என்றால் ஸிஹானூக்கா என்று ஐயம் கொள்ளுமளவு ஒன்றுக்கொன்று இரு பெயர்களும் ஊடுருவிக் கலந்து கொண்டன. தற்காலத்திய உலக அரசியல் சூழ் நிலையில் இவர் தன் நாட்டை நடு நிலைமை வகிக்கும் ஒரு நாடாக வைத்து நிர்வகிக்கிறார். இம் மனப்பான்மையினால் இவருக்கு உலக அரசியல் தலைவர் அந்தஸ்து கிடைத்து விட்டது. லாவோஸ் பிரச்சனையைத் தீர்க்கப் பதினான்கு தேசத்துப் பிரதிநிதிகள் கூட்டம் ஒன்று இயங்குவதற்கு இவர் ஒரு முக்கிய அடிகோலி. நாடு தற்காலத்தில் அன்னிய நாடுகளிடமிருந்து பொருளாதாரத் துறையில் பலத்த உதவி பெறுகிறது. உதாரணமாக, பிரெஞ்சுக்காரர்களும், அமெரிக்கர்களும் கூடி ஸிஹானூக்வில்லா என்று பெயர் கொண்ட புதிய துறைமுகப் பட்டினம் ஒன்றை உருவாக்கி அதைத் தலைநகருடன் இணைக்க ஒரு பெரிய சாலையையும் அமைத்திருக்கிறார்கள். சீனர்கள் ஒரு சிமிட்டி உற்பத்தி சாலையை நிருவியிருக்கிறார்கள்.

ஸிஹானூக் ஒரு சிறிய நாட்டைச் சேர்ந்தவர்; இவர் உலகப் புகழ் எய்தியது அண்டை நாடுகளாகிய ஸையாமும், தென் வியட்நாமும் ஆமோதிக்கவில்லை. ஏற்கெனவேயே எல்லைப்புற சச்சரவுகள் இவ்விரு நாடுகளுக்கும் கம்போடியாவுக்கும் இருந்து கொண்டிருக்கிறபடியால் கம்போடியாவுக்கு இப்பொழுது உலகில் நட்பு காட்டாத நாடுகள் இவைகள் இரண்டும் தான். கல்வி பயின்றவர்களுக்கும் பாட்டாளிகளுக்கும் இடையே உள்ள இடைவெளியை நெருக்க இவர் சாலை அமைப்புவேலையில் தானும் பங்கு கொண்டு தன் அமைச்சர்களையும் பங்கெடுத்துக் கொள்ளச் சொல்வார். வேடிக்கையாக இதர நாட்டு ஸ்தானிகர்களையும் கலந்து கொள்ளச் சொல்லி அவர்களுக்கு மதுபானத்துடன் பெருத்த விருந்துபசாரம் செய்வார். இவர் ஒரு பெரிய அரசியல் மேதை, ராஜதந்திரி. பிற்காலத்தில் இவர் பெயர் மேலும் மேலும் உலக அரசியலில் இடம் பெற வாய்ப்பு இருக்கிறது.

# சில குறிப்புகள்

### பூம்புகார்

காவிரிப்பூம் பட்டினத்திற்கு ஐந்து மைல் சுற்றளவில் உள்ள ஊர்களில் தொல் பொருள் ஆராய்ச்சியின் பயனாக, மிகப் பழங்காலத் தமிழ் மன்னர் நாணயங்களும், அழகுப் பொருள்களும் கிடைத்திருக்கின்றன. பழைய கட்டட அஸ்திவாரமும் கண்டு பிடிக்கப் பட்டிருக்கிறதாம்.

### மாட்டுப் பொங்கல்

திருச்சியில் கால்நடைக் கண் காட்சியைத் திறந்து வைத்த அமைச்சர் திரு. பக்தவத்சலம் மாட்டுப் பொங்கலன்று இத்தகைய கண்காட்சிகள் நடைபெறுவது பொருத்தமாக இருக்குமென்று குறிப்பிட்டார். மக்கள் தொகை அளவுக்குக் கால்நடைகளின் எண்ணிக்கையும் நாட்டில் இருந்து வருகிற தென்றும், கால்நடைகளுக்கு மேய்ச்சல் தரை போது மானதாக இல்லையென்றும், இத்துறையில் அரசாங்கம் தக்க முயற்சி செய்து வருவதாகவும் குறிப்பிட்டார்.

### ஆஸ்பத்திரி வேண்டாம்

சர்க்கார் ஊழியர்களுக்காக தனி ஆஸ்பத்திரி ஒன்று கட்ட ஏற்பாடு நடைபெறுகிறது. இதைப் பற்றிக் குறிப்பிடுகையில் ஆஸ்பத்திரியே இல்லாமல் மக்கள் சுகாதாரமாக வாழ்கின்ற நன்னாள் நம் நாட்டில் தோன்ற வேண்டுமென்பதே தம்முடைய ஆசை என்று சுகாதார அமைச்சர் திருமதி. ஜோதி வெங்கடாசலம் கூறினார்.

### தண்ணீர் இல்லை

பெரியாறு தமிழக எல்லையில் சிறு பகுதி மட்டுமே பாய்கிற தென்றும், அந்த அளவுக்குரிய பங்குக்கு மேல் அதிகமாகவே தமிழ்நாடு பெரியாற்று நீரை உபயோகித்து வருகிற தென்றும், அதற்கு மேலும் தண்ணீர் வேண்டுமென்ற கோரிக்கையைத் தமிழ்நாடு வற்புறுத்தினால் அதை ஏற்றுக்கொள்ள இயலாதென்றும் கேரள முதலமைச்சர் கண்டிப்பாகக் கூறுகிறார்.

### டெலி பிரிண்டர்

நம் நாட்டுக்குத் தேவையான டெலிபிரிண்டர் யந்திரங்களின் பாகங்கள் 85 சதவிகிதம் கிண்டி டெலிபிரிண்டர் தொழிற்சாலையே தயாரித்து விடும் என்றும் இந்த லட்சியம் 1964ல் நிறைவேறு மென்றும் கூறப்படுகிறது.

### இளைஞர்களுக்கு ஊக்கம்

இளைஞர் காங்கிரஸ் அமைப்பைத் தமிழகத்தில் ஊக்கப்படுத்தவும், இளைஞர்களை நிர்வாகப் பொறுப்புக்கும் பொதுத் தொண்டுக்கும் தயாரிக்கவும் என்றே தமக்கு மந்திரி பதவி கிடைத்திருப்பதாக இளைஞரான திரு. பூவராகன் கடலூர் கூட்டம் ஒன்றில் குறிப்பிட்டார்.

### முஸ்லீம்களுக்கு

முஸ்லீம் சமூகத்தினர் காங்கிரஸ் ஆட்சியில் கவனிக்கப்படவில்லை என்று இனி புகார் கூறுவது சரியல்ல வென்றும், காங்கிரஸ் ஸ்தாபனத்துக்கு விரோதமாக முஸ்லீம் சமூகம் நடந்து கொள்வதோ அதற்கு ஊக்கமளிப்பதோ தேசீய உணர்ச்சிக்கு ஒவ்வாதென்றும் அமைச்சர் திரு அப்துல்மஜீத் கூறினார்.

ஃ ஃ ஃ





அமுத வாக்கு

ஜாதி மதங்களைப் பாரோம் – உயர்
ஜன்மம் இத்தேசத்தில் எய்தினராயின்,
வேதியராயினும் ஒன்றே — அன்றி
வேறு குலத்தின ராயினும் ஒன்றே.








ஊன்றிய கொள்கையும் ஒன்றே கணந்தொறும்
தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே

| ஏடு 27 | 25—3—1962 | வாரம் 20 |
|---|---|---|

# நிர்மாண வேலை

நடைபெற்ற பொதுத் தேர்தலின் விளைவாக நாம் கற்றுக்கொள்ள வேண்டிய பல உண்மைகள் தெளிவாக இருக்கின்றன.

காங்கிரஸ் ஸ்தாபன வேலைகள் கிராமங்களிலிருந்து அடிப்படையில் தொடங்கி மிகவும் நன்றாக நடைபெற வேண்டியது அவசியம். காங்கிரஸ் அங்கத்தினர்கள் சேர்க்கும் பணியை ஆர்வத்துடன் தொடங்கிச் செய்வது ஒன்றுதான் தேசீய அரசாங்கத்தின் சாதனைகளையும் திட்டங்களையும் பொது மக்கள் நன்றாக உணர்ந்து கொள்ளுமாறு செய்யும் ஒரே வழி.

காங்கிரஸ் என்றால் அதிகாரச் செல்வாக்குள்ள அமைப்பு என்ற ஒரே எண்ணம் பரவலாக உண்டாகி விட்டால் அதிகாரத்தைத் தங்கள் தங்கள் நலனுக்குப் பயன்படுத்திக் கொள்ள என்ன வழி என்று சிந்தித்து அதற்கேற்றபடி வேஷம் போடும் திடீர் தேசீய வாதிகள் பெருகுவதற்கே அது இடம் கொடுக்கிறது. ஸ்தாபன ரீதியாக இடைவிடாமல் அடிப்படை வேலைகளைத் தொடர்ந்து செய்யவும் மக்களின் அன்றாட வாழ்க்கைப் பிரச்னைகளுடன் தொடர்பு கொள்ளவும் கிராமங்களில் காங்கிரஸ் ஸ்தாபன அமைப்பு வேலை திறமையாகவும் ஆர்வத்துடனும் நடைபெற வேண்டும்.

மற்றொன்று பிரசாரக் கவர்ச்சி. பிற கட்சிகள் அழகிய தமிழ்ச் சொற்பொழிவுகளைக் கொண்டு மக்களை உணர்ச்சி வசப் படுத்திக் கொண்டு அவர்களின் ஆதரவைப் பெற்று வருவதைப் பார்க்கிறோம். மேடைகளில் அழகு தமிழும் உணர்ச்சிப் பெருக்கும் உண்டாக்கியது காங்கிரஸ்தான். இன்றைய தினம் இலக்கியத்துக்கும் காங்கிரஸுக்கும் தொடர்பே இல்லாதது போலவும் அதெல்லாம் மற்ற கட்சிக்காரர்களின் ஏகபோகச் சரக்கு போலவும் ஒரு தோற்றம் உண்டாகியிருக்கிறது. தேசீய இலக்கிய முன்னணி ஒன்றை அமைத்து ஆங்காங்கு தமிழ் இலக்கிய ஆர்வமுள்ள இளைஞர்களையும் புலவர்களையும் ஒன்றுபடுத்தி அடிக்கடி இலக்கிய மாநாடுகள் நடைபெறச் செய்ய வேண்டும். தமிழ் அறிஞர்கள் இலக்கிய வாதிகளுக்கு காங்கிரஸில் இடமுண்டு என்பதை மீண்டும் நிலைநாட்ட வேண்டும். முன்னேறத் துடிக்கும் இளைஞர்களுக்கும் தமிழ் உணர்ச்சியுள்ளவர்களுக்கும் தேசீய ஸ்தாபனம் நிழல் தந்து அழைக்க வேண்டும்.

அடிப்படையான நிர்மாண வேலைகளில் கட்டுப்பாடாக ஒரு சாரார் நம்மில் தொடர்ந்து பணிபுரிவது ஒன்றுதான் மக்களின் ஆதரவைத் திரட்டுவதற்கு ஏற்ற வழியாகும். இந்தத் துறையில் நமது மாநிலத் தலைவர்கள் கவனம் செலுத்துவது அவசியமாகும்.

★

# கண்ணோட்டம்

— ரா. நா.

★ வழி காட்டும் தமிழ் நாடு
★ பெரும் அமைச்சரவை தேவையா
★ அறிஞரும், ஆச்சாரியாரும்
★ நாட்டுப் பிரிவினை பற்றி நேருஜி
★ அல்ஜீரியாவும், பிரஞ்சு ஆட்சியும்

மீண்டும் தமிழ் நாடு பாரத நாட்டிற்கு வழி காட்டிவிட்டது. மந்திரி சபை அமைப்பில் திரு. காமராசர் தமது பெயர் நிலைத்து நிற்கும் வகையில் பணியாற்றியுள்ளார். அனுபவம் வாய்ந்த பழைய மந்திரிகளும் இடம் பெற்றிருக்கிறார்கள். புது ரத்தமும் புகுத்தப் பட்டிருக்கிறது. தேர்தலில் காங்கிரஸை நூற்றுக்கு நூறு ஆதரித்த நெல்லை மாவட்டமும் கோவையும் இடம் பெற்றிருக்கின்றன. புது மந்திரி சபையில் சிறுபான்மையினர் என்கிற குறை முஸ்லிம்கள் மனத்தில் இடம் பெறலாகாது என்பதற்கு அறிகுறியாக திரு. அப்துல் மஜீத் மந்திரி பதவி அளிக்கப் பெற்றுள்ளார்.

இது பற்றி தி. மு. க. தலைவர்களில் ஒருவரான திரு. கருணாநிதி 'நாங்கள் அதை ஆதரித்தோம். எங்களைப் பின்பற்றி முஸ்லிம் மந்திரி நியமிக்கப் பட்டுள்ளார்' என்று கூறியிருக்கிறார். இது தவறு. திரு. அப்துல் மஜீத் பல ஆண்டுகளாக காங்கிரசில் பணியாற்றி வருபவர். ஆகையால் சென்னை ஆட்சியில் லீக் கூட்டுறவு கிடையாது என்பதை தி. மு. க. தலைவர் நினைவு கொள்ள வேண்டும்.

★

சமீபத்தில் நமது பிரதமர் பெரிய மந்திரி சபைகள் அமைக்கும் போக்கை லேசாகக் கண்டித்திருக்கிறார். "30 அல்லது 40 பேர் கொண்ட சபை பொதுக் கூட்டமாக அல்லவா ஆகிவிடும். அவ்வளவு பேர் இருந்தால் காரியம் எப்படி நடக்கும்" என்று கேட்டிருக்கிறார். எல்லோரையும் திருப்தி செய்வதற்காக பெரிய மந்திரி சபை அமைத்தால் பதவிப் பித்தை நீர் ஊற்றி வளர்ப்பதாகும். காங்கிரசுக்குள்ளேயே கட்சிப் பிரிவினை நிலைத்தால் அப்புறம் காங்கிரசின் மதிப்பும் செல்வாக்கும் எப்படி வளரும். பூசல் நிறைந்த பீகார், உ. பி. மைசூர் முதலிய இடங்களில் தான் எல்லா கோஷ்டிகளையும் திருப்தி செய்வதற்காகப் பெரிய மந்திரி சபை அமைப்பது அவசியமெனில் ஏகமனதாகத் தலைவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்ட மகாராஷ்டிரத்திலும், வங்காளத்திலும் எதற்காகப் பெரிய மந்திரி சபை அமைக்க வேண்டும்?

இளைஞர்களுக்கு நிர்வாகத்தில் பயிற்சியளிக்க வேண்டும் என்றால் தமிழக மந்திரி சபை அமைப்புச் சிறப்பைப் பாராட்டும் "ஹிந்து" பத்திரிகை எழுதியுள்ளது போல் சட்டங்கள் தயாரிப்பில் சட்ட சபை உறுப்பினர்களைக் கலந்து கொண்டு தயாரிப்பதன் மூலம்

பயிற்சி அளிக்கலாம். ஆட்சி நிலைத்து இருக்க வேண்டும், நிர்வாகம் கட்டுக்கோப்புடன் நடக்க வேண்டும். இதை மனதில் வைத்துக் கொண்டே மந்திரி சபைகள் அமைக்கப்பட வேண்டும். இப்போது பல ராஜ்யங்களில் மந்திரி சபை அமைப்பில் காணப்படும் விபரீதப் போக்குகள் நீடிக்குமானால் அடுத்த தேர்தலில் காங்கிரஸ் பலவீனப் பட்டுவிடும். இதை மனதில் வைத்துக் கொண்டு காங்கிரஸ் தலைவர்கள் தங்கள் கடமையை நிறைவேற்ற வேண்டும்.

★

தி. மு. க. வெற்றிக் கொண்டாட்டத்தில் நிகழ்ந்த சம்பவங்கள் ஆழ்ந்த கவனத்திற்குரியவை. திலகர் கட்டத்தில் வெற்றி விழாவில் பேசியவர்களில் திரு. என். வி. நடராசன் "மந்திரிகளைக் கல்லால் அடிக்கவேண்டும்" என்று கூறினாராம். தாம் தோற்றுப் போனதனால் ஏற்பட்ட ஆத்திரத்தை இவ்வாறு தீர்த்துக் கொண்டார் பாவம். அவர் பேசிய முறையை "அண்ணா" லேசாகக் கண்டிக்கவேண்டி வந்துவிட்டது. ஒரு கூட்டத்தில் அறிஞரும் சுதந்திரக்கட்சி ஸ்தாபகரும் சுதந்திர, தி. மு. க. கட்சிகளின் ஒத்துழைப்பு நீடிக்க வேண்டும் என்று பேசினார். அன்று மாலையிலேயே மற்றோர் கூட்டத்தில் திரு. மதியழகன் பேசுகையில் "சுதந்திரக் கட்சிக்கும் நமக்கும் எவ்வித லட்சிய ஒருமைப்பாடும் இல்லை. இந்தக் கூட்டுறவினாலும், கம்யூனிஸ்டுகள் ஒத்துழைக்காததாலும் தான் நமக்குக் கிடைக்க வேண்டிய அளவு வெற்றிக் கிடைக்கவில்லை" என்று கூறியுள்ளார்.

திராவிடஸ்தான் கோரிக்கையை சுதந்திரக் கட்சி ஏற்கவில்லை. அந்தக் கோரிக்கைதான் தன் உயிர் என்று அறிஞர் கூறுகிறார்: இவ்விரு கட்சிகளும் எப்படி ஒன்றுபட்டு உழைக்க முடியும்? காங்கிரஸின் மீதுள்ள வெறுப்பும், தங்கள் ஆசைக்குக் குறுக்கே காங்கிரஸ் நிற்கிறது என்பதனால்தான் இவ்விரு கட்சிகளும் ஒன்றுசேர்ந்தன.

★

தேர்தலில் தோல்வியுற்ற அறிஞர் பாராளுமன்றத்திற்குப் போகிறார். திராவிடஸ்தான் கோரிக்கையை ஏற்கவே முடியாது என நேரு கண்டிப்பாகக் கூறியுள்ளார் பாராளுமன்றக் கூட்டத்தில். ஆனால் டெல்லி சென்று அங்கு பல்வேறு அறிஞர்களைச் சந்தித்து அவர்கள் கருத்துக்களை அறிந்த பிறகாவது திரு. அண்ணா ஞானோதயம் பெறுவாரா? இந்தப் பிரிவினைக் கட்சியைப் பிற அரசியல் கட்சிகள் எப்படி ஆதரிக்க முடியும் என்று நேரு வியப்புறுகிறார். துவேஷக் கருத்தினால் ஊக்குவிக்கப் பட்டவர்கள் எப்படி ஆக்கக் கருத்துக்களைப்பற்றிச் சிந்திக்க முடியும்? தி. மு. க. சட்டசபை உறுப்பினர்களுக்கு புத்திமதி கூறிய திரு. ஆச்சாரியார் "சர்க்கார் என்ன தவறு செய்கிறது என்பதை கவனித்து அம்பலப்படுத்துவதிலேயே கவனம் செலுத்துங்கள்" என்று போதனை செய்துள்ளார். எதிர்க்கட்சி என்பது எப்படியாவது ஆட்சியினர் மீது குற்றம் கண்டு பிடிப்பதே தொழிலாகக் கொண்டிருத்தல் கூடாது என்று ஒரு பிரிட்டிஷ் அரசியல் ஞானி கூறியுள்ளதை ஆச்சாரியார் மறந்துவிட்டார் போலும். ஆனால் இந்தப் பேச்சைக் கேட்ட பிறகும் தி. மு. க. வின் சட்டசபைக் கட்சித் தலைவர் திரு. நெடுஞ்செழியன் "நல்லது செய்தால் சர்க்காரை ஆதரிப்போம். பொறுப்புள்ள எதிர்க்கட்சியாக நாங்கள் பணிபுரிவோம்" என்று கூறியுள்ளது பாராட்டுக் குரியது. ஆட்சியாளரும், எதிர்க்கட்சியினரும் மக்கள் நலனை மனதிற் கொண்டே செயல் புரிய வேண்டும்.

★

ஆப்பிரிக்க நாட்டிலிருந்து நற்செய்தி கிடைத்திருக்கிறது. அல்ஜிரிய தேசிய வாதிகளும, பிரஞ்சு ஆட்சியினரும் சமாதானமாகப் போவதாக தற்காலிக உடன்பாடு செய்து கொண்டு விட்டனர். பல்லாயிரக் கணக்கான மக்கள் இருதரப்பிலும் உயிர் துறந்தபின் சமாதானம் ஏற்பட்டிருக்கிறது. பிரஞ்சு ஆட்சியாளர் மக்கள் எழுச்சியின் பலத்தை அறிந்து ஆள்சேதம் நிகழாமல் தவிர்த்திருக்கலாம். ஆனால் சாம்ராஜ்ய வெறியினால் ஆட்சியாளருக்கு அறிவு மங்கியிருந்தது. ஒரு மக்களை எதிர்த்து நின்று நீடித்து ஆட்சிபுரிய முடியாது என்பதை பிரஞ்சுக்காரர்கள் உணர்ந்திருந்தால் முன்னமே சமாதானம் ஏற்பட்டிருக்கும். பிரஞ்சு ஆட்சியினருக்குப் பல சலுகைகள் அளிக்க அல்ஜீரியத் தலைவர்கள் ஒப்புக் கொண்டதிலிருந்து, முன்பு நடந்த கொடுமைகளால் அவர்கள் மதி இழந்து வெறுப்புக்கு இடமளிக்கவில்லை என்பது தெரிகிறது. இதே போல் பிரஞ்சு ஆட்சியினரும் பெருந்தன்மையுடன் நடந்து கொண்டால் பழைய கோர சம்பவங்களை மறந்து விடுவது சுலபமாகும்.

★

நமது புராதன நாகரிகம்

# காவிரிப்பூம்பட்டினம்

செந்தமிழ் நாட்டில் ஐம்பெரும் காப்பியங்களுக்கு சிறப்பிடமாக விளங்கும் காவிரிப்பூம்பட்டினத்தின் பழமையை இலக்கியம் கற்றோர் நன்குணர்வர். காவிரியின் கடைமுகத்தில் சீரும் சிறப்பும் பெற்று விளங்கிய மிகப் பழமையான நகரமாகும். காவிரிபூம்பட்டினத்தின் துறைமுகம் மூலப் பொருள்களை வழங்கும் பண்டகசாலையாகவும் விளங்கியது. மேலும் ஆதியில் யவன நாட்டு கப்பல்கள் காவிரி நாட்டு கடற்கரையில் பொருள் பெறக்காத்துக் கொண்டிருந்த நகரமாகவும் விளங்கியது.

இந்தியத் தொல் பொருள் ஆராய்ச்சி இலாகாவின் தென்வட்டக் குழுவினர் சென்ற 7ம் தேதி முதல் 16ம் தேதிவரை 10 நாட்கள் காவிரிப்பூம்பட்டினம் பகுதியிலுள்ள பல சிற்றூர்களுக்குச் சென்று பல இடங்களில் ஆய்வுகள் நடத்தினர்.

இப்பகுதிகளில் புதை பொருள் ஆராய்ச்சி செய்யவேண்டுமென்று பல துறைகள் மூலம்வலியுறுத்தல் செய்து வந்தவருமான ஸ்ரீ நா. தியாகராசன், மற்றும் சில அன்பர்களும் இவர்களுக்கு உறுதுணையாக இருந்து வந்தனர்.

மேற்படி ஆய்வுக் குழுவினர் காவிரிப்பூம்பட்டினம் 5மைல் சுற்றளவில் ஆய்வு செய்துள்ள ஊர்களில் இதுவரையில் ஆய்வுகளில்கிடைக்கப்பெறாத சில உண்மைகளை நிறைய கண்டுபிடித்துள்ளனர். இவ்வளவு காவிரிபூம்பட்டினத்தின் பழமையை உணர்த்தப்போதியனவாகும் என்றும் கூறப்படுகின்றது. சதுர வடிவில் உள்ள புலி இலச்சினை இட்ட செம்புக்காசுகள் — மஞ்சள் — சிவப்பு—பச்சை—வெள்ளை வண்ணங்களுக்கு பல வகை உருவில் மணிகள், மிகப்பழங்காலத்தில் பயன் படுத்தப்பட்ட பாத்திரங்களின் சிதைந்த ஓடுகளைக் கண்டுபிடித்துள்ளனர்.

ஆய்வுக் குழுவினர் சிறப்பாக கீழையூர் கிராம வயலில் ஆய்வு செய்து மிகப்பெரிய அளவில் சுமார் 2 அடி நீளமும், $1\frac{1}{4}$ அடி அகலமும், 3 அங்குல கனமுள்ள செங்கல்லால் கட்டின கட்டிடத்தின் அஸ்திவாரத்தையும் கண்டு பிடித்துள்ளனர்.

மேலும் இப்பகுதிகளிலுள்ள மக்கள், மேற்கொண்டு ஆய்வுக் குழுவினர்கள் ஆவன செய்து காவிரிப்பூம்பட்டினத்தின் பழமைக்கு ஒளியூற்றுவார்களென்று ஆர்வத்தோடு எதிர் நோக்குகின்றனர்.

★

அமரகவியின்

## படைப்புகள்

அமரகவி பாரதியார் தம் கைப்படவே எழுதிய கவிதைகளையும் கட்டுரைகளையும் போட்டோ பிடிக்க தமிழ் நாடு சர்க்கார் ஏற்பாடு செய்து வருகிறது.

தற்போது பாரதியாரின் கையெழுத்துப் பிரதிகள் அரசாங்க மியூசியத்தில் வைக்கப்பட்டிருக்கின்றன. 14 புத்தகங்களாக அவை இருக்கின்றன. காலப் போக்கினால் இப்பிரதிகள் மக்கி விடலாம் என்பதால் இவைகளை போட்டோ பிடித்து வைக்க ஏற்பாடு செய்யப்படுகிறது.

# விஞ்ஞானச் செய்தி

## பூமியின் வடிவம்

கொலம்பஸ் காலத்தில் நமது பூமி வட்ட வடிவமாக உள்ளது என்று கூறி வந்தார்கள். ஆனால் இன்று விஞ்ஞானிகள் இளம் பிராயத்தைத் தாண்டிய பூமியானது நடுத்தர வயது தோற்றத்தை அளிப்பதாகக் கூறி வருகிறார்கள்.

நாம் கற்பனை செய்து கொள்ளுவது போல உலகம் உருண்டை வடிவமுள்ளதாக இல்லை. துருவங்களில் தட்டையாகவும், பூமத்திய ரேகைகளில் பருத்தும் இருக்கிறது. சுருக்கங்கள் விழுந்திருப்பதாகவும் கூறப்படுகிறது. செயற்கைக் கோளை அனுப்புகிறவர் ஒருவர் கூறியபடி பூமியானது உண்மையில் உருண்டையாக இல்லாமல் சுருக்கங்கள் விழுந்த (சுட்ட கத்திரிக்காய் போன்று) தோற்றம் அளிக்கிறது.

பூமியானது முற்றிலும் கோள வடிவமுள்ளது என்பது குறித்து விஞ்ஞானிகள் பல வருடங்களாக சந்தேகித்து வந்தார்கள். துருவங்களில் சிறிது தட்டையாகவும் நடுப்பகுதியில் வயிறு உப்பியும் இருப்பது தெரியவரும். ஆனால் செயற்கைச் சந்திரன்களை வான வெளியிலே செலுத்திய பின் தான் இதற்கு ருசுக் கிடைத்தது.

அமெரிக்க தேசிய விமான வானவெளி ஆராய்ச்சி நிர்வாகத்தைச் சேர்ந்த ஜான் ஓ காப் வான் கார்டு செயற்கைக் கோள் சுற்றி வந்ததிலிருந்து பூமியானது வால் பேரிக்காய் போன்ற வடிவமுள்ளது என்று கண்டுபிடித்தார். ஜான் ஹாப்கின் சர்வகலாசாலையைச் சேர்ந்த பௌதிக ஆராய்ச்சிக் கூடத்தைச் சேர்ந்த விஞ்ஞானிகள் இக்கருத்தை ஊர்ஜிதம் செய்துள்ளார்கள்.

கப்பல்கள், விமானங்களின் போக்கு வரத்து முறைக்குப் பயன்படும் பருவ நிலை அறிவிப்புக்கு செயற்கைக் கோள்கள் மிக நுட்பம் வாய்ந்தவையாக இருக்கும். பூமியின் வடிவத்திலுள்ள குறைபாடுகளை இவை நன்கு கண்டு பிடிக்க முடியும்.

வானிலை ஆராய்ச்சிக்காக இரண்டாவது செயற்கைக் கோளைச் செலுத்திய பின் பூமியானது வால்பேரிக்காய் போன்ற வடிவமுள்ளது என்றும், பெருத்திருக்கும் மத்திய பகுதியில் சுருக்கங்கள் உள்ளன என்றும் பதிவு செய்ய முடிந்தது.

அதன் பிறகு செலுத்தப்பட்ட செயற்கைக் கோள் மிகத் துல்லியமான தகவல்களைச் சேகரித்துத் தெரிவித்துள்ளது. பூமத்திய ரேகைப் பகுதி சாய் வளையமாக இருப்பதும் தெரிய வந்தது. ஆனால் விஞ்ஞானிகள் இன்னும் பூமியின் வடிவத்தைப் பற்றித் தகவல்களைச் சேகரித்து கணக்கிட்டு வருகிறார்கள்.

★

## மின்னணு இருதயம்

மனிதர்களின் இருதயங்களில் கோளாறு ஏற்பட்டிருந்தால் அவற்றை எடுத்துவிட்டு, பதிலுக்குச் செயற்கை மின்னணு இருதயங்களைப் பொருத்துவது வருங்காலத்தில் சாத்தியமாகலாம் என்று தெரிகிறது.

இருதயங்கள் சாதாரண பம்புகள் போன்றவையே. மின்னணுப் பொறியியலாளர்கள் உடலில் பொருத்தக் கூடிய செயற்கை இருதயங்கள் செய்ய முடியும்; செய்வார்கள்.

தற்போது உள்ள கஷ்டமெல்லாம் செயற்கை இருதயத்தை மனித உடலில் பொருத்திய பின்னர் அது இயங்குவதற்கு விசை அளிப்பது எப்படி என்பதுதான். ரேடியோ மூலம் விசை அளிப்பது ஒரு வழி என்றும், மற்றொரு வழி இயந்திரப் பொறி வகையைச் சேர்ந்ததென்றும், விரிந்து சுருங்கும் தசைகளுக்கு ஏற்பச் செயற்கை இருதயத்தை இயக்கும் வில் (ஸ்பிரிங்) ஒன்றை அதில் பொருத்துவதே அம் முறை என்றும் தெரிகிறது.

★

## பிளாஸ்டிக் விமானம்

அமெரிக்காவில் பளுவில்லாத பிளாஸ்டிக் விமானம் உற்பத்தி செய்யப்பட்டு வருகிறது. கனம் குறைவாக உள்ள விமானங்கள் செய்யும் அமெரிக்கக் கம்பெனிகளில் ஒன்று பைப்பர் விமானக் கம்பெனி. 1962 வசந்த காலத்தில் பிளாஸ்டிக் விமானங்கள் பறக்கத் தொடங்கும்.

விமானத்தின் உடல், சிறகுகள், வால் ஆகியவை எல்லாம் முக்கியமாகப் பிளாஸ்டிக்கால் செய்யப்பட்டிருக்கின்றன. அந்த பிளாஸ்டிக், கண்ணாடி இழைத் துணி கலந்து உறுதி பெற்ற பிளாஸ்டிக். உடலும் சிறகுகளும் இரண்டு பகுதிகளின் இணைப்பாக உள்ளன.

திட்டம் இன்னும் ஆராய்ச்சி நிலையில் இருப்பதாகவே கம்பெனி தெரிவிக்கிறது. பிளாஸ்டிக் விமானங்கள் உற்பத்தி செய்யப்படுவதால், உற்பத்திச் செலவு கணிசமாகக் குறையுமாயின், பிளாஸ்டிக் விமானங்கள் செய்யப்படும்.

★

## வாயு வேகம்

பாண்டம் 2 என்ற விரைவாகச் செல்லும் ஜெட் விமானம் ஒன்றை அமெரிக்கக் கடற்படை அமைத்துள்ளது. பரிசோதனையாக அது சென்றபோது, மணிக்கு 1,604 மைல் பறந்திருக்கிறது. இதுவே உலகிலேயே மிகவும் விரைவாக பறக்கும் ஜெட் விமானம். நிமிஷத்துக்கு 26 மைல் வேகத்தில் அது பறக்கிறது.

ராக்கெட் உதவியின்றி அது அவ்வளவு வேகத்தில் பறந்திருக்கிறது. மணிக்கு 1,650 மைல் வேகத்துக்கு மேலும் பறந்திருக்கிறது. அவ்வளவு வேகமாகச் செல்லக்கூடிய விமானம் வேறெதுவும் இல்லை.

★

## அணு உலை

புதிய வகை அணு உலை ஒன்றை அமெரிக்க அணு சக்திக் குழு கிட்டத்தட்ட செய்து முடித்துள்ளது. அந்த அணு உலை தான் பயன்படுத்தும் எரிபொருளைவிட அதிகமான அணு எரிபொருளை (புளுட்டோனியம்) உற்பத்தி செய்யும். அதே சமயத்தில் விற்பனை செய்யக்கூடிய அளவு மின்விசையையும் அது உற்பத்தி செய்யும். இந் நிலையம் 20,000 கிலோ வாட் மின் விசை உற்பத்தி செய்யும். 35,000 மக்கள் வாழும் ஒரு நகருக்கு அந்த மின்விசை போதும்.

★

## விண் வெளி

அமெரிக்காவில் டெக்சாஸ் மாநிலத்திலுள்ள ஹூஸ்டனில் மாபெரும் விஞ்ஞானப் பொறியியல் நிலையம் அமைக்கும் வேலை விரைவில் ஆரம்பமாகும். சந்திரனில் ஆட்கள் போய் இறங்க அது பணி செய்யும். சந்திரனுக்குச் செல்லும் விண்வெளி விமானத்தை அமைத்துச் சோதனை செய்து பார்க்க இந்த ஆய்வு கூடம் பயன்படுத்தப் படும்.

சந்திரனில் இறங்கச் செய்யப் படும் முயற்சியே "அப்பாலோ" திட்டம் ஆகும். சந்திரனுக்குச் செல்லும் விண் வெளி விமானிகளுக்குப் பயிற்சியளிக்கும் வேலையையும் இந்த நிலையம் செய்யும்.

பறக்கும் திட்டத்துக்கு வேண்டிய வசதிகளும், கருவிகளை மதிப்பிடும் ஆய்வுக் கூடமும் சூழ்நிலையைச் சோதனை செய்யும் ஆய்வுக் கூடமும் நிலையத்தில் இருக்கும்.

★

### மருத்துவத் துறையில்

# முன்னேற்றம்

★ சஸ்திர சிகிச்சையில் புதுமை

★ வேறு எலும்புகளைப் பொறுத்தும் முறை

வைத்யத்துறையில், முக்யமாக சஸ்திர சிகிச்சைத் துறையில் ஏற்பட்டுள்ள பிரமாதமான முன்னேற்றம் மனித வர்க்கத்தினர் நோயற்று வாழவும் எப்பேர்ப்பட்ட வியாதிகளிலிருந்து தப்பவும் வழிவகைகளை ஏற்படுத்தியுள்ளது.

பாதிக்கப்பட்ட எலும்பையும் தசைகளையும் அகற்றிவிட்டு அவைகளுக்குப் பதிலாக வேறு நல்ல எலும்பையும் தசைகளையும் அமைக்கும் கலையில் மேற்கு ஜெர்மன் நிபுணர்கள், வெகுவாக முன்னேற்றமடைந்துள்ளனர்.

இதர துறைகளிலுள்ள நிபுணர்களைக் காட்டிலும் வைத்யத் துறை விஞ்ஞானிகள் மனித குலத்தின் எதிர்காலம் மிக சிறப்பான முறையில் அமைந்திருக்கும் என்ற கருத்தை வெளியிட்டுள்ளனர். கீல் நகரில் சமீபத்தில் நடைபெற்ற ஒரு பல்கலைக் கழக மகாநாட்டில் பல துறையிலுள்ள நிபுணர்கள் கூடி 'விஞ்ஞானத்தின் முன்னேற்ற' மென்பது குறித்து விவாதித்தனர். வக்கீல்கள் தத்துவஞானிகள் ஆகியோர் மனிதவர்க்கத்தினர் தங்கள் அபிலாட்சைகளைக் குறைத்துக் கொள்ள வேண்டும் என்று பேசினர். ஆனல் விஞ்ஞானிகள் மனித குலத்திற்கு சுபிட்சமான எதிர்காலம் இருக்கிறதென்று கூறினர்.

கீல் சஸ்திர நிபுணரும், பல்கலைக் கழக சஸ்திரத் துறை இயக்குனருமான பேராசிரியர் வாங்கே தன் கருத்தைத் தெரிவிக்கையில் சமீப வருஷங்களில் சஸ்திர சிகிச்சை துறையில் பிரமாதமான முன்னேற்றம் ஏற்பட்டுள்ளதென்றும் பல அதிசயங்களை சாதிக்கக்கூடிய நிலைமை அதனல் ஏற்பட்டிருக்கிறதென்றும் கூறினர். ரத்த அழுத்தம் உடல் சீதோஷ்ணம் இவை விஷயங்களில் கூட சிகிச்சை முறைகளைக் கையாண்டு வெற்றி காண முடியும் என்றும் அவர் கூறினர். வேலை செய்வது நின்றுபோன இருதயத்தைக்கூட ஒட்ட வைத்துவிட முடியும் என்றும் அவர் குறிப்பிட்டார். இதே மாதிரி தீவிபத்தில் ஏற்பட்ட உடல் சேதங்கள், மூளைக்கு ஏற்பட்ட சேதம் மற்றுமிதர நோய்கள் இவைகளை எல்லாம் குணப்படுத்த வழிகள் இப்போது கண்டுபிடிக்கப்பட்டுவிட்டன. முன்பு, இம்மாதிரி நிலைமை எல்லாம் கைவிடப்பட்டவைகளாகும். ஆனல் இன்று எப்பேர்ப்பட்ட நிலைமையையும் சிகிச்சை மூலம் குணப்படுத்திவிட முடியும்.

பாதிக்கப்பட்ட உடல் உருப்புகள், எலும்புகள், தசைகள் இவைகளை அகற்றி அந்த இடங்களில் வேறு உறுப்பு, எலும்பு, தசை இவைகளைப் பொருத்தும் விஷயமாக உள்ள அத்யாயத்தைப் போல் மிக சுவாரஸ்யமானது சஸ்திர சாஸ்திரத்திலேயே இல்லை என்று பேராசிரியர் வாங்கே கூறுகிருர். பிராணிகளின் எலும்புகளை மனிதர்களுக்குப் பொருத்தும் விஷயமாகவும் வெற்றி ஏற்பட்டுவிட்டதென்றும் அவர் கூறினர்.

வேறொரு தசையை மனித உடலில் வைத்துப் பொறுத்திஞல் எளிதில் 'ஆன்டிஜென்ஸ்' என்கிற ஒருவித பொருள் ஏற்பட்டு குணமாவதைப் பாதிக்கும். இதைக் கவனியாது விட்டால் சில மாதங்களில் வைத்துப் பொருத்திய எலும்பையோ தசையையோ அகற்றும்படியாக நேரலாம். இம்மாதிரி ஏற்படும் இடைஞ்சல் நீக்கவும் வழி கண்டுபிடிக்கப்பட்டு விட்டன. இதற்கான இரு முறைகளில் ஒன்று. " எக்ஸ் ரேடியேஷன் " என்ற கிரண வீச்சின் மூலம் புதுப் பொருள் ஏற்படாமல் தடுப்பது.

மருந்துகள் மூலம் இதை சாதிப்பது. இந்தப் பிரச்சனையைத் தீர்க்க நிரந்தரமான வழி இன்னும் கண்டுபிடிக்கப் படவில்லை.

மற்றொரு முறை பொருத்தப்படும் எலும்பு தசைகள் இவைகளை முன்னதாகவே பண்படுத்தி "ஆண்டி ஜென்ஸ்" என்ற பொருள் ஏற்படாமல் செய்வது முக்கியமாக இத்துறையில் கீல் நகர விஞ்ஞானிகள் மிகப் பிரமாதமான வெற்றியை அடைந்துள்ளனர். கன்றுக் குட்டிகளின் எலும்புகளை எடுத்து பதம் செய்து பக்குவப்படுத்தி அவர்கள் வைத்துள்ளனர்.

மனித உடலில் வைத்துப் பொருத்துவதற்காகத் தயாரிக்கப்படும் இந்த எலும்புகளில் " ஆண்டிஜென்ஸ் " என்ற விஷப்பொருள் உற்பத்தியாகாமலிருக்கும்படிச் செய்வதற்கான ஒரு நூதன முறையை மேற்கு ஜெர்மன் நிபுணர்கள் கண்டு பிடித்திருக்கின்றனர்.

சஸ்திர சிகிச்சைத் துறையில் இந்த சாதனை இல்லாமலிருந்தால் அது ஒரு பெரும் இடைவெளியாகவே இருந்து வரும். வைத்தியத் துறையில் இம்மாதிரி இடைவெளிகள் இருக்கவே இடமளிக்கக் கூடாது என்று பேராசிரியர் வாங்கே கூறுகிருர். மருந்துகளின் முக்கிய நோக்கம் மனித வர்க்கத்தினரை ஆரோக்கியத்துடன் வாழச் செய்வதே. உருப்புகளைப் பொருத்தும் சஸ்திர சிகிச்சை கலையில் ஆடோ பிளாஸ்டிக்ஸ், ஹோமோ பிளாஸ்டிக்ஸ், ஹெட்ரோ பிளாஸ்டிக்ஸ் என்ற மூன்று முறைகளிலும் மேற்கு ஜெர்மனி தலைமை வகித்து நிற்கிறது. இத் துறைகளில் மேலும் ஏற்படும் முன்னேற்றங்களால் மனித குலம் மேலும் பயனடையும் என்று எதிர்பார்க்கலாம்.

∴ ∴ ∴

# மலைமேல்...

## அற்புத சாதனை

மேற்கு ஜெர்மனியிலுள்ள வாண்டல் டீன் மலைச் சிகரம் ஆல்ப்ஸ் மலைத் தொகுதிகளைச் சேர்ந்த மிகவும் இயற்கை அழகு வாய்ந்ததொன்ருகும். இதில் பாதிதூரம் வரை போவதற்கு மலை மீது ரயில் போட்டிருக்கிருர்கள். இதன் மூலம் 3,500 அடி உயரம் வரைப் போய்ச் சேர்ந்துவிடலாம். இதற்கு மேல் உயரம் போகவேண்டும் என்ருல் ஏறித்தான் செல்ல வேண்டும். இச்சிகரத்தின் உச்சியில் அதாவது 6,000 அடி உயரத்தில் வான ஆராய்ச்சி நிலையம் ஒன்று அமைக்கப்பட்டிருக்கிறது. வான ஆராய்ச்சி நிபுணர்கள் 3,500 அடி உயரம் வரை ரயிலில் வந்து பின்னர் ஏறித்தான் சென்று வருகிருர்கள். இவர்களுக்கு சௌகரியம் செய்து தருவதற்காக பவேரியா அரசாங்கம் ஒரு "லிப்ட்" அமைக்க ஏற்பாடு செய்துள்ளது. இதன் பூர்வாங்க வேலை ஆரம்பமாகிவிட்டது.

போட்டுள்ள திட்டப்படி எல்லாம் நடந்தால் இவ்வருஷ முடிவிற்குள் இந்த "லிப்ட்" வேலை செய்ய ஆரம்பித்து விடும்.

ஐரோப்பாவிலேயே மலையில் இம்மாதிரி "லிப்ட்" அமைப்பது இதுவே முதல் தடவை. இந்த லிப்டில் வான ஆராய்ச்சி நிபுணர்கள், விஞ்ஞானிகள் ஆகியவர்கள் மட்டுமேதான் ஏறி உச்சியிலுள்ள வான ஆராய்ச்சி நிலையத்திற்குச் செல்ல அனுமதிக்கப்படுவர்.

உல்லாசப் பயணிகள் சிகரத்தின் உச்சியை அடைய வேண்டும் என்ருல் நடந்து ஏறித்தான் செல்ல வேண்டும். இம் மலை மீது அமைக்கப்பட்டுள்ள ரயில்வே, ஜெர்மனியில் மலைமீது அமைக்கப்பட்டுள்ள முதலாவது ரயில்வேயாகும். மேற்கு ஜெர்மனியின் மிக அழகான சிகரம் உல்லாசப் பயணிகளுக்கு மகிழ்ச்சி தருவதுடன் விஞ்ஞான ஆராய்ச்சிக்கும் உதவும்படியாக இருக்கிறது.

★

# நிசப்தம்

நெதர்லண்ட்ஸ் நாட்டின் ஹோட்டல்களிலும், சிற்றுண்டிச் சாலைகளிலும், மதுபான விடுதிகளிலும் நிசப்தத்தை விலை கொடுத்து வாங்க முடியும் பதினொரு நயா பைசா கொடுத்தால் மூன்று நிமிஷத்துக்கு இசைத் தட்டு சங்கீதத்தின் தொல்லையில்லாமல் சாப்பிட்டுவிட்டு வர முடியும்.

ஹோட்டல்களில் 'ஜூக்-பாக்ஸ்' இசை என்ற பெயரில் முழங்கும் சங்கீதம் காதைத் துளைக்கும் நாராசச் சக்தி வாய்ந்தது; இதுவே பைத்தியமாய் அலையும் இளைஞர்கள் ஏராளமாயிருக்கிறார்கள். ஆனால் நிம்மதியாய் ஒரு ஹோட்டலுக்குப் போய் சாப்பாடோ சிற்றுண்டியோ சாப்பிட விரும்புவோருக்கு இது ஒரு பெரிய தலைவேதனையே தவிர வேறில்லை. அவர்களுடைய கஷ்டத்தைப் பார்த்து சகிக்காத கிராமஃபோன் இசைத் தட்டுக் கம்பெனி முதலாளி ஒருவர் ஓர் அருமையான யுக்தி பண்ணினார். புதுவகை "ஒலித்தட்டு" ஒன்றை அவர் தயாரித்தார்; பார்ப்பதற்கு அது சாதாரண இசைத் தட்டைப் போலத்தான் இருக்கும். ஆனால் அதிலிருந்து சத்தமே வராது; ஜூக்-பாக்ஸில் நாணயத்தைப் போட்டு அந்த ஒலித் தட்டுக்குரிய பித்தானை அழுத்தினால் மூன்று நிமிஷ நேரத்துக்கு "நிசப்தத்தைக் கேட்டுக் கொண்டு" நிம்மதியாய்ச் சாப்பிடலாம். (எ). சாதாரணமாய் ஒரு கப் டீயோ, காப்பியோ குடிப்பதற்கு மூன்று நிமிஷம் போதுமானது. ஒரு வேளை தாமதமானால் இன்னொரு நாணயத்தை ஜூக்-பாக்ஸில் போட்டுவிட்டுப் பித்தானை அழுத்தினால் இன்னொரு மூன்று நிமிஷத்துக்கு நிசப்தம் வாங்கிவிட முடியும். இதை நன்கு தெரிந்து கொண்ட அந்த முதலாளி இப்படி ஓர் அருமையான யுக்தியைச் செய்து ஹோட்டல்களில் நிம்மதியைப் பரிமாறி வருகிறார்.

(எ) ஜூக்-பாக்ஸ் என்பது ஓர் அலங்காரப் பெட்டி போல் இருக்கும். வேறு எண்கள் தாங்கிய பல பித்தான்கள் இருக்கும். [ஒவ்வொரு எண்ணும் இசைத் தட்டுக்கானது. பெட்டியின் ஓரத்தில் ஓட்டை ஒன்று இருக்கும். அதன் வழியாக உரிய நாணயத்தைப் போட்டுவிட்டு, நமக்குப் பிடித்தமான இசைத் தட்டுக்குரிய பித்தானை அழுத்தினால் உடனே பெட்டியிலிருந்து இசைக் கேட்கும். இசைக்கு பதிலாக நிசப்தத்தை இதே முறையில் வழங்குவதுதான் அந்தக் கம்பெனி முதலாளியின் நோக்கம்.



# புதிய நாணயம்

நாணயங்கள் உற்பத்தி செய்வதற்காகத் தாமிரம் இறக்குமதி செய்வதில் ஏற்படும் அன்னியச் செலாவணிச் செலவில் சிக்கனத்தைக் கடைப்பிடிக்கும் பொருட்டு, ஒரு நயா பைசா நாணயத்தை நிக்கல், பித்தளைக் கலப்பு உலோகத்தில் தயாரிப்பதென்று இந்திய சர்க்கார் முடிவு செய்துள்ளனர். அணா, பைசா வரிசைகளில் வாபஸ் பெறப்பட்ட நிக்கல், பித்தளை நாணயங்களிலிருந்து எடுக்கப்படும் உலோகத்திலிருந்து இந்த நாணயங்கள் செய்யப்படும். இப்புதிய நாணயமானது வடிவ அமைப்பிலும் உருவத்திலும் எடையிலும் வெண்கலத்தால் செய்யப்பட்ட ஒரு நயா பைசா நாணயத்தைப் போலவே இருக்கும். ஆனால் தோற்றத்தில் மட்டும் மஞ்சள் நிறமாக இருக்கும். இப்புதிய நாணயங்களில் 1962 அச்சடிப்பு வருடமும், அதற்குப் பிறகு அடுத்தடுத்த வருடங்களும் பொறிக்கப் பட்டிருக்கும்.

இப்புதிய நாணயங்கள் பம்பாயிலுள்ள இந்திய ரிசர்வ் பாங்கியிலிருந்து 1962 மார்ச் 22 முதல் வெளியிடப்படும். அதன் பிறகு படிப்படியாக இதர நாணய வெளியீட்டுக் காரியாலயங்களிலிருந்து வெளியிடப்படும். புதிய நிக்கல், பித்தளை ஒரு நயா பைசா நாணயம் வெளியிடப்படுவதால் தற்போதிருந்து வரும் வெண்கல நாணயங்கள் வாபஸ் பெற்று விடப் படமாட்டா. புதிய நாணயங்களுடன் இவையும் தொடர்ந்து இருந்து வரும்.



# மெட்ரிக் அளவு

தமிழ் நாடு அரசாங்கம் 1962 ஏப்ரல் 1-ந் தேதி முதல் மெட்ரிக் எடைகள் மட்டுமே தமிழ் நாடு முழுவதும் எல்லா பரிவர்த்தனைகளிலும் உபயோகிக்க வேண்டும் என்று உத்தரவு போட்டு இருக்கிறது. மணங்கு, வீசை, பலம், பவுண்டு, களஞ்சி, வராகன், துலாம், குண்டு, தூக்கு முதலிய பழைய எடைகளை ஏப்ரல் 1-ந் தேதி முதல் எங்கும் வியாபாரிகள் உபயோகிக்கக் கூடாது. புதிய படிகளான கிராம், கிலோகிராம், குவிண்டாஸ் முதலிய படிகளைத்தான் உபயோகிக்க வேண்டும். புதிய மெட்ரிக்முறை சுலபமானது. ஏப்ரல் முதல் பழைய படிகளை உபயோகித்தால் 3 மாதம் கடுங்காவல் அல்லது 500 ரூபாய் அபராதம் விதிக்கப்படும். எடைகளையும் அளவுகளையும் பொறுத்த பொதுவானமுறை நமது நாட்டில் இருந்து வந்ததில்லை. சொல்லப் போனால் பல்வேறு வகைப்பட்ட 143 முறைகள் பழக்கத்தில் இருக்கின்றன. புதிய மெட்ரிக்முறை சென்னை மாநிலத்தில் நிலையான எடைகளும் அளவுகளும் ஏற்பட வழி கோலியுள்ளது என்று தூத்துக்குடி படியளவு அதிகாரி திரு. முகமது ஜாபர் கூறியுள்ளார்.



# கைத்தறி நெசவாளர்

தமிழ் நாடு கைத்தறி நெசவாளர் காங்கிரஸ் பொதுக் காரியதரிசி Dr. K. S. கோபாலசாமி அறிவிப்பதாவது:—

தமிழ் நாடு கைத்தறி நெசவாளர் காங்கிரஸ் ஆதரவில் பொதுத் தேர்தலில் காங்கிரஸ் கட்சியை கைத்தறி நெசவாளர் ஆதரிக்க வேண்டும் என்றும், அதற்காக ஒரு பிரசாரக் கமிட்டி ஏற்படுத்தி அதன் கன்வீனர் சென்னை திரு. K. பெருமாள் உடையாருடன் சுமார் 347 கிராமங்கள் தேர்தலுக்கு ஒரு மாத முன்பு சுற்றுப் பயணம் செய்ததில் கைத்தறி நெசவாளர்களும், இதர தொழிலாளத் தோழர் தோழியர்களும் பெருவாரியாகக் காங்கிரஸ் கட்சியையே ஆதரித்தனர். கைத்தறி நெசவாளர்களும், தொழிலாளிகளும் அதிகமாக வசிக்கும் இடங்களில் காங்கிரஸ் அமோக வெற்றி அடைந்திருக்கிறது. ஆனாலும் சில எதிர்க் கட்சியைச் சேர்ந்தவர்கள் தேர்தலுக்குப் பின்பு தொழிலாளர்களிடையே புகுந்து துஷ்ப் பிரசாரம் செய்ய ஆரம்பித்திருக்கின்றார்கள். இதைத் தடுக்க இந்திய தேசிய தொழிற் சங்கக் காங்கிரசும் தமிழ் நாடு காங்கிரஸ் கமிட்டித் தொழிலாளர் பகுதியும் தொழிலாளர்களிடையே தீவிரமாக திட்டமிட்டு வேலை செய்ய வேண்டியது மிகவும் அவசியமாகிறது. புதிதாக நிலம் சொந்தமில்லாத விவசாயத் தொழிலாளர்களிடையே புகுந்து கிளர்ச்சியும், காங்கிரஸ் அரசாங்கத்திடம் வெறுப்பும் உண்டாக்க முயற்சிக்கின்றனர். ஆகையால் விவசாய தொழிலாளர் சங்கங்களை ஏற்படுத்தி அவர்கள் நல்ல முறையில் தங்கள் உரிமைகளைப் பெற வழி வகைகள் செய்யவேண்டியது தேசீய தொழிற் சங்கத் தலைவர்கள் கடமை என்று நான் வற்புறுத்தத் தேவையில்லை.



# கம்பர் திருநாள்

மதுரைத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் சார்பில் கம்பர் திருநாளானது 22-3-62 வியாழனன்று மாலை சிறப்பாகக் கொண்டாடப் பட்டது. திரு எஸ். ராமச்சந்திர பத்தர் தலைமை வகித்தார். கழகச் செயலாளர் திரு வி. ஜி. சீனிவாசன் வரவேற்புரை வழங்கினார். தியாகராசர் கல்லூரித்தமிழ்பேராசிரியர் திரு அ. கி. பரந்தாமனார் தொடக்கவுரை வழங்கினார். கம்பர் புகழ் பாடி பேசிய சிறுவர் சிறுமியர்க்கு திரு நா. இராமையாப் பிள்ளை சங்கச்சார்பில் பரிசுகள் வழங்கினார். திருவாளர்கள் கம்பர் திருவேங்கடம், வித்துவான் அ. சிவசுப்பிரமணியம், தி. சேஷாத்திரி, அ. ரங்கராஜன் ஆகியோர் முறையே குணங்களால் உயர்ந்த வள்ளல், இராமாவதாரம் கம்பனும் துளசியும், காவியச் சிறப்பு ஆகிய பொருள்கள் பற்றி முறையே பேசினர். தலைவரது சீரிய ஆராய்ச்சிப் பின்னுரைக்கு பின்பு செயலாளர் திரு வி. ஜி. சீனிவாசன் மொழிந்த நன்றியுடன் விழாஇனிதே முடிந்தது.

ஃ ஃ ஃ

அமெரிக்கரின்

# மத நம்பிக்கை

பாரத தேசத்தின் மதக் கொள்கைகளை அறிய வேண்டும் என்னும் ஆர்வம் அமெரிக்காவில் அதிகமாகக்காணப்படுகிறது. முக்கியமாகக் கல்லூரிகளிலும் பல்கலைக் கழகங்களிலும் உள்ளவர்களுக்கு இந்த ஆர்வம் மிகவும் அதிகமாக இருக்கிறது. இந்தியாவின் தத்துவத்தை அதிகமாக அறிய வேண்டுமென்று அவர்கள் விரும்புகிறார்கள். சுவாமி ரிதஜானந்தாவின் கருத்து இது. அவர் சென்னையைச் சேர்ந்தவர். அமெரிக்காவில் நியூயார்க்கிலும், கலிபோர்னியாவிலும் வேதாந்த நிலையங்களில் ஏழு ஆண்டுகள் பணியாற்றிவிட்டு, அவர் இங்கு வந்திருக்கிறார்.

சென்னை ராமகிருஷ்ண நிலையத்தில் சிலவாரங்கள் தங்கிப்போக அண்மையில் அவர் வந்து சேர்ந்தார். சென்னை நிலையத்தில்தான் சுமார் 30 ஆண்டுகளுக்கு முன் அவர் ராமகிருஷ்ண மிஷனைச் சேர்ந்தார். பாரிஸுக்கு அருகேயுள்ள வேதாந்த நிலையம் ஒன்றில் பணியாற்ற அவர் நியமிக்கப்பட்டிருக்கிறார்.

கலிபோர்னியா பல்கலைக்கழக மாணவர் ஹிந்து மத தத்துவத்தை அறிய அருகேயுள்ள வேதாந்த நிலையங்களுக்கு வருவதாக அவர் தெரிவித்தார். தாம்கண்டவர்களில் பலர் பகவத் கீதையை படித்தவர்கள் என்றும், இந்நாட்டு மதநூல்களை அறிந்துகொள்ளும் நுண்ணறிவு படைத்தவர்கள் என்றும் அவர் கூறினார்.

மாணவர்களுக்குமட்டும் அக்கறை இருப்பதாக சொல்ல முடியாது, பல்வேறுவாழ்க்கைத்துறைகளையும் சேர்ந்தவர்கள் பலர், பெரு நகரங்கள் பலவற்றிலுள்ள வேதாந்த நிலையங்களுக்கு வந்துவிரிவுரைகள் கேட்கிறார்கள், வகுப்புக்களில் சேர்ந்து கற்கிறார்கள், வழிபாட்டிலும் கலந்து கொள்கிறார்கள் என்று சுவாமி ரிதஜானந்தா கூறினார்.

"கடவுள் நம்பிக்கை போன்ற ஆன்மார்த்த நெறிகளுக்கு வேதாந்தம் முரண்பட்டதல்ல. அந்த மதநம்பிக்கை பெரியகுருஒருவரைச் சார்ந்ததாக இருக்கலாம். எங்கள் வழிபாட்டில் ராமகிருஷ்ணர் அத்தகைய குருவாக விளங்குகிறார். எங்கள் பேச்சுக்களில் மற்ற மதங்களின் கருத்துக்களையும் தலைவர்களின் உரைகளையும் மேற்கோள்களாகக் காட்டுகிறோம்" என்று சுவாமிஜி குறிப்பிட்டார்.

இந்த நூற்றாண்டுத் தொடக்கத்தில் சுவாமி விவேகானந்தர் அமெரிக்காவுக்குச் சென்றிருந்தபோது, அவர் ஊட்டிய ஊக்கத்தால் நியூயார்க்கிலும் சான் பிரான்சிஸ்கோவிலும் வேதாந்த நிலையங்கள் தோன்றின. அமெரிக்காவிலும் வெளிநாடுகளிலுள்ள இந்த நிலையங்களெல்லாம் அந்தந்த இடங்களிலுள்ள மக்களின் ஆர்வத்தாலும் முயற்சியாலும் நடைபெற்று வருகின்றன என்றும், தம்மைப்போன்ற சுவாமிகள் அந்த நிலையங்களின் நிகழ்ச்சிகளுக்குத் தலைவர்களாக இருக்கிறார்கள் என்றும் அவர் கூறினார்.

நெருக்கடியான இக்கால வாழ்க்கையில் தற்கால மக்களுக்கு ஆன்மார்த்த கொள்கைகளும் முறைமைகளும் வேண்டும், அவை மக்களை நன்னிலையில் நிறுத்தும். அமெரிக்கருக்கு இது மிகவும் முக்கியம். சரியான மன நிலையும், நலனும் அவசியம் என்று அவர்கள் உணர்கிறார்கள் என்று அவர் குறிப்பிட்டார்.

அமெரிக்கர் லோகாயத வாதிகள் என்று சொல்லப்படும் குற்றச்சாட்டைப் பற்றியும் அவர் தமது கருத்தைத் தெரிவித்தார். மற்ற நாடுகளின் மக்களை விட அமெரிக்கர் அதிக மனிதாபிமானமும் கருணையும் உள்ளவர்கள். அவர்களது தொண்டிலும் கூட்டுறவிலும் சிறந்த பரோபகாரப் பண்பு வெளிப்படையாகத் தெரிகிறது. இயற்கையின் நலன்களை நல்ல முறையில் பயன் படுத்துவதில் அமெரிக்கர் ஊக்கமும் திறமையும் உள்ளவர்களாக இருக்கிறார்கள். அவர்கள் சூதுவாதில்லாமல் பேசுகிறார்கள்; உபசரிப்பதில் சிறந்து விளங்குகிறார்கள் என்றும் அவர் கூறினார்.

# செய்திக் கோவை

## சிகப்பு ஒளி

மிகவும் சக்தி வாய்ந்த ஒரு சிகப்பு விளக்கை சந்திரனை நோக்கி அடிக்க அமெரிக்க விஞ்ஞானிகள் திட்டம் போட்டு இருக்கின்றனர். சந்திரன் இந்த சிகப்பு விளக்கைத் திரும்ப பூமிக்கு அடிக்கும் என்பது இவர்கள் நம்பிக்கை. இந்த வெளிச்சம் 2 கோடி மைல் தூரம் வரை தெரியக்கூடியது என்றாலும் கூட இந்த ஆராய்ச்சி பற்றி வெளியே ஒன்றும் அதிகம் தெரியாது.

மிச்சிகன் சர்வகலாசாலை அருகே இந்த ஆராய்ச்சி நடத்தப்படும் பக்கத்திலுள்ளவர்களுக்கு இந்த ராக்ஷஸ ஒளி ஆகாயத்தில் ஒரு சிகப்பு ஊசிபோலத் தோன்றும் என்றும், சிறிது நேரம் உற்றுப் பார்த்தால் தான் அது தெரியும் எனவும் யு. எஸ். விஞ்ஞானிகள் கூறுகின்றனர்.

## சாகா வரம்

ஜெர்மனியில் ஒரு ரஸ்தா விபத்தில் காயமடைந்த பிங்கென்டலி என்னும் இளைஞன் ஆஸ்பத்திரியில் நான்குமுறை இறந்தானென்றும் ஒவ்வொரு தடவையும் டாக்டர்கள் அவனுடைய இருதயத்தை மின்சாரக் கருவி மூலம் இயங்க வைத்தாகளென்றும் ஆஸ்பத்திரி அதிகாரி ஒருவர் கூறுகிறார். நான்காவது முறையாக அவன் இருதயம் நின்றதும் அதை மீண்டும் வேலை செய்ய வைக்க அடிவயிற்று தசைநாரில் ஒரு சின்னஞ்சிறு மின்சாரக் கருவியை டாக்டர்கள் வைத்தார்கள். இக் கருவி 5 வருடங்களுக்கு வேலை செய்யுமாம் வேண்டுமானால் இக் கருவியைப் புதுப்பித்துக் கொள்ளலாம்.

## இயந்திர மனிதன்

மாஸ்கோவுக்கும் லெனின் கிராடுக்கும் இடையில் ஒரு மின்சார இரயிலை யந்திர டிரைவரைக் கொண்டு ஓட்டிச் சோதனை நடத்தி வருவதாக டாஸ் செய்தி ஸ்தாபனம் தெரிவிக்கிறது.

ரயில்வே பாதையின் மேடு பள்ளங்களுக்கும் எதிர்ப்படும் காற்றோட்டத்திற்கும் ஏற்ப ரயிலின் வேகத்தை அது மாற்றிக்கொள்ளுமாறும், குறித்த நேரத்தில் ஸ்டேஷன்களுக்கு வந்து சேரும் வகையிலும் வேகம் ஒழுங்கு படுத்தப் படுமாம்.

ஆனால் யந்திரத்தை அப்பழுக்கற்றதாக்க இன்னும் வெகு நாளாகும் என்று சொல்லப் படுகிறது.

இந்த முயற்சி வெற்றிகரமாகி விட்டால் ரயில்களை ஓட்டுவதற்குப் பதிலாக பார்வையாளராக ஒருவர் இருந்தால் போதும் இயந்திரமே எல்லா வேலைகளைக் கவனித்துக்கொள்ளும்.

## செயற்கை கோள்

ரஷ்யாவின் புதிய செயற்கைக் கோள் 92 நிமிடங்களுக்கு ஒரு முறை உலகை வலம் வருவதாக மேற்கு ஜெர்மனியிலுள்ள போர்ச்சும் வான ஆராய்ச்சி நிலையம் அறிவித்தது. முன்பு சோவியத் வானவர்களை ஏற்றிச் சென்ற செயற்கைக் கோள்களின் சமிக்ஞைகளின் அலை நீளமே, புதிய செயற்கை கோளுக்கும் இருப்பதாக அறிவிப்பு கூறுகிறது.

## புது கிருமி நாசினி

'டெட்டா' என்ற ஒரு புதிய இரசாயனக் கலவையை சோவியத் விஞ்ஞானிகள் தயாரித்துள்ளனர். இதனை நாம் உடுத்தும் துணிகளின் மீது பூசிக்கொண்டால் ஒரு மாதகாலத்திற்கு கொசுக்கள், ஒட்டுணிகள், முதலியவற்றிலிருந்து பாதுகாப்புப் பெறலாம்.

## ரசாயன உரத் தொழிற்சாலை

சென்னை கிண்டி அழகப்பா என்ஜினீயரிங் கல்லூரியில் ரசாயன உரம் சம்பந்தமாக ஒரு கருத்தரங்கமும் பொருட்காட்சியும் நடந்தது. கருத்தரங்கைத் தொடங்கிய நிதியமைச்சர் திரு. பக்தவத்ஸலம் பேசுகையில் 'உணவுப் பொருட்களைப் பொறுத்த மட்டிலும் தமிழ்நாடு அநேகமாக சுயதேவை பூர்த்தி பெற்று விட்டது. இதற்கு காரணம் சாகுபடி நிலத்தின் விஸ்தீரணம் அதிகமானது மட்டுமல்ல, விவசாயிகள் புதுமுறை விவசாயக் கருவிகளையும் ரசாயன உரங்களையும் தாராளமாக பயன்படுத்துகிறார்கள். ரசாயன உரத்திற்கு தற்காலம் பஞ்சம்தான். என்றாலும் இதிலும் சுய தேவையை பூர்த்தி செய்யவே அரசாங்கம் முயன்று வருகிறது. வருடம் ஒன்றுக்கு 1 லட்சத்து 28 ஆயிரம் டன் உரஉப்பு தயாரிக்க 3 புதுத் தொழிற்சாலைகளுக்கு சமீபத்தில் தான் லைசென்ஸ் வழங்கப் பட்டது.

இதன் மூலம் ராஜ்ய உற்பத்தி அளவு 2 லட்சத்து 53 ஆயிரம் டன்னை எட்டுகிறது. இந்த அளவு உற்பத்தி 3 வது திட்ட காலத்தின் இறுதியில் சாத்தியமாகும். அப்போதும்கூட 70 ஆயிரம் டன் பற்றாக்குறை இருக்கும். இதை நிவர்த்தி செய்ய மேலும் ஒரு புதிய உர உப்புத் தொழிற்சாலை திறக்கப்படலாம்.

## விடுதிகள்

குற்றாலத்தில் தங்கும் விடுதி கட்டுவதற்காக மத்திய சர்க்கார் தமிழக அரசாங்கத்துக்கு ரூ. 5 லட்சம் அளிக்கிறது. குற்றாலத்தில் கேரள சர்க்காருக்குச் சொந்தமாக உள்ள விருச்சிக மண்டபத்தையும் அதைச் சூழ்ந்துள்ள பகுதிகளையும் வாங்க சென்னை சர்க்கார் பரிசீலனை செய்து வருகிறது. இது தவிர மதுரை, குமரிமுனை, உதகை திருச்சி ஆகிய இடங்களில் தங்கும் விடுதிகள் கட்ட மத்திய சர்க்கார் பங்காக 1961–62 ம் ஆண்டுக்கு ரூ. 1·54 லட்சம் அளிக்க அனுமதி அளித்துள்ளது.

## திருச்சி எழுத்தாளர் சங்கக் கூட்டம்

திருச்சி எழுத்தாளர் சங்கத்தின் மாதாந்திரக் கூட்டம் 18—3—62 ல் ராஜேந்திரா தனிப்பயிற்சிக் கல்லூரியில் கவிஞர் திரு. வீர மெய்யப்பனின் தலைமையில் நடைபெற்றது. திருச்சி எழுத்தாளர் சங்கத் தலைவர் திரு. அ. வெ. ர. கிருஷ்ண சாமி ரெட்டியார் வரவேற்புரை கூறியபின் அறிஞர் திரு. வீரப்பா கடவுள் வாழ்த்துப் பாடினார்.

அவரவர்கள் ரசித்த இலக்கியம் பற்றி அங்கத்தினர்கள் பலரும் விருந்தினர் சிலரும் மிக சுவைபட 'இலக்கிய விமர்சனம்' என்ற தலைப்பில் விமர்சனம் செய்தனர். தலைவர் பின்னுரைக்குப் பின், சங்கச் செயலாளர் திரு. ரா. நீலமேகம் நன்றி கூற கூட்டம் இனிதே முடிவுற்றது.

ஃ ஃ ஃ

---

## சீர்காழி டி. மு. கோ.

O. P. 6/62

வெங்கட்ராமய்யர் —மனுதார்

Nil —எதிர்மனுதார்

மாயூரம் தாலூகா ஆலங்குடி ராமச்சந்திர அய்யர் மனைவி இறந்த தையு அம்மாளுக்கு மனுவில் கண்டபடி வரவேண்டிய டிகிரி வசூலித்தடைய மனுதார் பாத்தியமுள்ளவர் என்று வார்சு சர்டிபிகேட் கோரி கொடுத்த மனு 7-4-62 ல் வாய்தா. அன்று கோர்ட்டில் ஆக்ஷேபனையை தெரிவிக்காவிடில் Exparte யாக முடிவு செய்யப்படும்.

S. ராமமூர்த்தி,

1 | 4872 | 233 அட்வகேட்.

---

## கோவில்பட்டி டி.மு.கோ

E.P. 559/61 in S.C. 512/52

லெக்ஷிமி அம்மாள் வகையரு மூன்றுபேர்கள் –2, 3, 4 வாதிகள் பவர் ஏஜண்ட் அ. சா. ராமசாமி நாயக்கர் மூலமாய்.

நா. மு. சங்கரநாராயணய்யர் –பிரதிவாதி

ஷை பிரதிவாதி அறிவது. ஷை டெம்பரில் ஜப்தி சொத்துக்கு இஸ்தியார் தீர்மானிப்பதற்கு 27-3-62 பகல் 10 மணிக்கு வாய்தா போடப் பட்டிருக்கிறது.

R. ஞானதேசிகம் பிள்ளை,

2 | 4873 | 234 வக்கீல்.

Edited & Published by its owner Sri Triloka Sitaram and Printed by him at his Shivaji Newsprinters, 24, A-Theradi Bazaar, Tiruchy-2.
Single copy six nP. ANNUAL SUBSCRIPTION INCLUDING 4 SPECIAL NUMBERS: For INDIVIDUALS Rs. 5. For INSTITUTIONS Rs. 10.